திரு. கே. வி. ராமசாமி : இப்போது நம் மாநிலத்தில் கூட்டுறவுப் பண்ணைகள் எத்தனை நடைபெற்று வருகின்றன? அவைகளால் லாபம் எவ்வளவு, நஷ்டம் எவ்வளவு?

கனம் திரு. என். எஸ். எஸ். மன்ருடியார் : இந்த விவரம் இப்போது என்னிடம் இல்லை. இதற்கு தனிக் கேள்வி போட வேண்டும்.

திரு. ஏ. கே. தங்கவேல் முதலியார் : இந்த 'ஜாயிண்ட் ஃபார்மிங் ஸொஸைடீஸ்' எத்தனை நடக்கின்றன? இவற்றில் எத்தனை 'ஃபெய்ல்யூர்' ஆயின?

கனம் திரு. என். எஸ். எஸ். மன்ருடியார் : கனம் அங்கத்தினரின் இந்தக் கேள்விக்கு விவரமாக பதில் வேண்டுமானல் தனிக் கேள்வி போட வேண்டும்.

*Outbreak of fire in Government Timber Depot in Kanyakumari district*

* 143 Q.—SRI M. SANKARALINGAM PILLAI : Will the Hon. the Minister for Co-operation be pleased to state—

(a) whether there was any outbreak of fire in the timber depot maintained by the Government in the Kanyakumari district during the years 1963–64 and 1964–65;

(b) if so, the loss incurred; and

(c) the cause for the fire?

THE HON. SRI N. S. S. MANRADIAR : (அ) நாகர்கோவிலில் உள்ள விற்பனை நிலையத்தில் தீ விபத்து ஏற்படவில்லை. ஆனல், அரசாங்க ரப்பர்த் தோட்டங்களில் உள்ள காடுகள் துறை டிப்போக்களிலும் திருநெல்வேலி தெற்கு டிவிஷனில் தேக்கு மர நடவுக்காக வெட்டி வைக்கப்பட்டிருந்த மரங்களிலும் 1964, 1965-ம் ஆண்டுகளில் தீ விபத்து ஏற்பட்டது.

(இ) கன்னியாகுமரியில் உள்ள அரசாங்க ரப்பர் தோட்டங்களில் ரூ. 44,021 நஷ்டம் ஏற்பட்டது.

திருநெல்வேலி தெற்கு டிவிஷனில் ரூ. 390 நஷ்டம் ஏற்பட்டது.

(உ) குத்தகைக்காரர்களோ அவர்களது ஆட்களோ அணைக்காமல் எறிந்து விட்டுப்போன பீடித்துண்டுகள் தீ பரவுவதற்குக் காரணமாக இருந்திருக்கலாம் என்று சந்தேகிக்கப்படுகிறது.

திரு. எம். சங்கரலிங்கம் பிள்ளை : கோடை காலத்தில் ரப்பர் தோட்டங்களில் ரப்பர் மரத்தைச் சுற்றியிருக்கும் சருகுகளையும் காய்ந்த இலைகளையும் ஒதுக்கி அவற்றிற்குத் தீ வைப்பது, தோட்டத்தைப் பாதுகாத்து நிர்வகிப்பவரின் வேலை. அரசாங்க ரப்பர் தோட்டத்தில் இந்த வேலையைச் சரியாகச் செய்யாததால் இந்த மாதிரியான விபத்து ஏற்பட்டது. தனியார் ரப்பர்

[8th November 1965

தோட்டங்களில் இந்த மாதிரியான விபத்து ஏற்படவில்லை. எனவே இதை கவனித்து இந்த விபத்திற்குக் காரணமாக இருந்த வர்கள் மீது நடவடிக்கை எடுக்கப்படுமா ?

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்றாடியார் :** விபத்து விஷயத்தில் தனியார் துறை, சர்க்கார் துறை என்று வித்தியாசம் பார்க்க வேண்டியதில்லை. எங்கோ தவறுதலாக பீடித் துண்டு போடப் பட்டிருந்தது. இது சம்பந்தமாக கவனித்து தக்க நடவடிக்கை எடுக்கப்படும்.

*Government Timber Depots*

* 144 *Q.*—SRI M. SANKARALINGAM PILLAI : Will the Hon. the Minister for Co-operation be pleased to state—

(*a*) the number of Government Timber depots which are utilised for storage of forest timber;

(*b*) the average expenditure incurred for felling and transporting a cubic foot of forest timber to the depot; and

(*c*) the price at which a cubic foot was sold when it was auctioned during 1964–65 ?

**The HON. SRI N. S. S. MANRADIAR:** (*a*) The number of Government Timber Depots is seven (7).

(*b*) and (c).

| Timber depot. | Average Expenditure incurred for felling and transporting rate per cubic foot. | Price for which sold per cubic foot. |
|---|---|---|
| (1) | (2) | (3) |
| | RS | RS. |
| Pollachi (Coimbatore South) .. .. | 1·70 | 5·60 |
| Mettupalayam (Coimbatore Central) .. | 1·50 | 7·97 |
| Nagercoil (Tirunelveli South) .. .. | 0·77 | 4·00 |
| Pettai (Tirunelveli South) .. .. | 1·27 | 4·77 |
| Cumbum (Madurai South) .. .. | 0·40 | 3·21 |
| Kargudi (Nilgiris) .. .. .. | 0·74 | 7·00 |
| Wentworth (Nilgiris) .. .. .. | 0·93 | 7·00 |

**திரு. எம். சங்கரலிங்கம் பிள்ளை :** இந்தக் காட்டு மரங்களைச் சேமிக்கும் இடங்களுக்குக் கொண்டுவந்து அங்கே விற்பதில் வரும் லாபத்திற்கும் இவற்றைக் காடுகளிலேயே ஏலத்தில் விற்பதில் வரும் லாபத்திற்கும் ஏதாவது வேறுபாடு இருக்கிறதா ?

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்றாடியார் :** அப்படியும் ஒருசில இடங்கள் இருக்கின்றன. அந்த அந்த இடங்களில் அதிக வித்தி யாசம் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை.